

# ஸ்ரீ கோவிந்த பகவத்பாதர்

டாக்டர் வி.ஏ. தேவசேனாபதி

புகழ்பெற்ற கௌடபாதருக்கு மாணாக்க ராகவும் ஜகத்குருவான ஆதிசங்கரருக்குக் குரு வாகவும் இருந்தவர் கோவிந்த பகவத்பாதர். இவர் ஆதிசேஷனின் அவதாரமாகக் கருதப் படுபவர். கோவிந்த பகவத்பாதர் என்று விளங் கியபோது இவர் நூல் ஏதும் செய்ததாகத் தெரிய வில்லை. என்றாலும், ஆதிசேஷனின் பல தோற் றங்களில் பதஞ்சலியாக வந்ததும் ஒன்று என்னும் மரபின்படி பார்த்தால் – வியாகரண மகாபாஷ் யம், யோகசூத்திரம், ஆயுர்வேதம் பற்றிய சரகம் என்னும் நூல் ஆகிய மூன்றுடனும் கோவிந்த பகவத்பாதருக்கு மறைமுகத்தொடர்பு உண் டெனக் கூறலாமெனத் தோன்றுகிறது.

உள்ளம், உரை, செயல் நிகழ்வதற்குக் கருவியாகிய உடல் ஆகிய மூன்றும்– மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும்– சேர்ந்தவர் களாக நாம் இருக்கிறோம். மனத்தைக் கட்டுப் படுத்த உதவுவது யோகசூத்திரம். வாக்கு அல்லது உரை செவ்வையாக அமைய வழி வகுப்பது இலக்கண நூலாகிய வியாகரணம். உள்ளமும் உரையும் உடலை நிலைக்களனாகக் கொண்டுள்ளன. உடல் பழுதற்றிருப்பதுடன் உரமாகவும் இருக்கவேண்டும். உடலை ஓம்பு வது எங்ஙனம் என்பதற்கு வழிகாட்டுவது மருத்துவ நூலாகிய சரகம். இவற்றைச் சற்று விரிவாக மீண்டும் பார்ப்போம். (1) உள்ளம் நிலைகொள்ளாது அலைவதால் ஏற்படும் பிறழ்வு அமைதியைக் குலைத்து அச்சத்தை உண்டாக்கு வதுடன் உடலுக்கும் ஊறுவிளைவிக்கிறது. எனவே உள்ளத்தை அடக்கி ஆளுவது இன்றி யமையாததாகிறது. (2) மொழியைத் திருத்த மாகப் பேசவும் எழுதவும் வேண்டும். கொச்சை யாகப் பேசுவதும் எழுதுவதும் மரியாதைக் குறை வான செயல்களாகக் கருதப்பெறும். இனி, ஒரு மொழி மந்திரசக்தி வாய்ந்ததாயின், அதாவது ஆக்கவும் அழிக்கவும் கூடிய சக்தி வாய்ந்த தாயின், அதை ஆளுவதில் மிக விழிப்பாக இருக்க வேண்டும். இலக்கணவரம்பின்படி அதைப் பயன்படுத்த வேண்டும். (3) உடலைப் பாதுகாப்பது உயிரின் வளர்ச்சிக்காக எனத் திருமூலர் கூறுவதை நினைவுகொள்ளலாம்.

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்படு மெய்ஞ்ஞானம் சேரவும்மாட்டா
உடம்பை வளர்க்கும் உபாயமறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே.

–(திருமந்திரம்)

இவ்வாறு பதஞ்சலியாக ஆதிசேஷன் இவ்வுலகுக்கு வந்தபோது மூன்று நூல்களை இயற்றினார். அவரே உலகமரபைக் காப்பதற் காகக் கோவிந்த பகவத்பாதராக வந்து ஆதி சங்கரருக்குக் குருவாக வாய்த்தார். உள்ளம், உரை, செயல் செம்மைப்படுவது உயிரின் பொருட்டுத்தான். அவ்வுயிருக்கு உறுதி செய் வது யார்? எங்ஙனம்? உயிருக்கு உறுதிசெய்ய சிவனே ஆதிசங்கரராக அவதாரம் செய்ததால் அவதாரத்துக்கு முன் ஏற்பாடான நிலையை உண்டாக்குவதற்காகப் பதஞ்சலியாகத் தோன்றி மூன்று நூல்களை எழுதியும் உலகமரபைக் காப்பதற்காக ஆதிசங்கரருக்குக் குருவாக இருப் பதற்காக கோவிந்த பாதராகவும் ஆதிசேஷன் திருஉருவங்கள் கொண்டார். ஆதிசேஷன்

வெறும் பாம்பு அல்லர். தெய்விகமானவர். எனவே திருப்பணி (திரு=தெய்விகமான, பணி= பாம்பு) என்னும் வகையில் தம் பெயருக்கு ஒத்த இயல்பு வாய்ந்தவராகத் திருப்பணி செய்தார். ஆதிசேஷனே இலக்ஷ்மணனாக அவதரித்தார் என்னும் மரபின்படி இராமாவதாரத்தில் இராம னுக்கு இடைவிடாது தொண்டுசெய்தார்.

சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு. —(பொய்கையாழ்வார்)

எவ்வுருவிலும் எவ்வகையிலும் தொண்டு செய்வது ஆதிசேஷனின் இயல்பு.

ஆதிசேஷன் கோவிந்த பகவத்பாதராக வருவதற்குமுன் என்ன நிகழ்ந்தது என்று பார்ப்போம். பதஞ்சலியாயிருந்தபோது ஓரா யிரம் மாணாக்கர்களுக்கு அவர் பாடம் சொல்ல வேண்டியிருந்தது. ஒரே சமயத்தில் அவர்கள் அனைவருக்கும் பாடம் சொல்வதற்காக அவர் தன்முன் திரை போட்டு மறைத்துக்கொண்டு, ஆயிரம் நாவுடைய ஆதிசேஷன் உருவத்தில் பாடம் சொல்லத் தொடங்கினார். பாடம் முடியும் வரை யாரும் வெளியே செல்லக்கூடாதென்றும், திரையைத் தூக்கிப் பார்க்கக்கூடாதென்றும் பாடம் தொடங்குவதற்குமுன் அவர் உத்தர விட்டிருந்தார். பாடத்தில் கருத்துச் செலுத்த முடியாமலிருந்த ஒருவர்—கௌட தேசத்தி லிருந்து வந்தவராதலால் கௌடர் என்னும் பெயரினர் – வெளியே சென்றார். பாடம்கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவர் திரைக்குள் பதஞ்சலி எப்படி பாடம் சொல்லுகிறார் என்று பார்க்க விரும்பித் திரையைத் தூக்கினார். உடனே ஆதிசேஷனின் பார்வையும் நச்சுக்காற்றும் பட்டதால் 999 பேரும் எரிந்து சாம்பலாயினர். ஆதிசேஷன் பதஞ்சலி உருவத்தை மீண்டும் எடுத்துக்கொண்டு நிகழ்ந்ததற்காக வருந்தும் சமயத்தில் வெளியே சென்றிருந்த மாணாக்கர் திரும்பவந்தார். ஒருவராவது பிழைத்தாரே, (உயிர் தப்பினாரே) என்ற மகிழ்ச்சி ஒருபுறமும் ஆயினும் ஆணையை மீறிப் பிழைத்தாரே (பிழை செய்தாரே) என்ற வருத்தம் ஒருபுறமுமாக, பதஞ்சலி அவரைப் பார்த்து ''நீ சொல் மீறிய பிழைக்காகப் பிரம்மராக்ஷஸாகப் போக வேண் டும். தகுந்த மாணாக்கன் கிடைத்து அவனுக்கு நீ வியாகரண பாடம் சொன்னதும் அந்தத் தண் டனை நீங்கும்'' என்று கூறி வியாகரண பாடம் முழுவதையும் மீண்டும் சொல்ல நேரமில்லாத தால், தம் அருள் ஆற்றலால் அப்போதே அற்புத முறையில் அம்மாணாக்கனுக்கு வியாகரண அறிவைப் புகட்டினார்.

பிரம்மராக்ஷஸாக மாறிய கௌடர் ஓரிடத் தில் ஓர் அரசமரத்தில் அமர்ந்துகொண்டு, அவ் வழியே செல்வோரை வியாகரணத்தில் சிக்க லான கேள்வி கேட்பார். அக்கேள்வி விகுதி பற்றிய ஓர் இலக்கண விதிக்கு விலக்கு இருப் பதைப் பற்றியதாகும். **பச்** என்னும் வேர்ச்சொல் லுக்கு, **க்த** என்னும் விகுதியைச் சேர்க்கும் போது பொதுவிதிப்படி **பக்தம்** என்றாகாமல் **பக்வம்** என்று அவ்விதிக்கு விலக்காக விகுதி யேற்கும். இவ்விதிவிலக்கு நன்கு தெரியாத காலமாதலால் பலர் ''பக்தம்'' என்றே சொல்வர். ''பக்தம் அன்று... பக்வம். நீயும் நான் தின்பதற்குப் பக்வம் (நன்றாகச் சமைக்கப்பட்டவன்) தான்'' என்று கூறி பிரம்மராக்ஷஸ் அவர்களைத் தின்றுவிடும். இவ்வாறு இருக்கையில் ஒரு நாள் காஷ்மீரத்தி லிருந்து சந்திரசர்மா என்னும் ஓர் அழகிய இளைஞர் அவ்வழி வந்தார். பிரம்மராக்ஷஸின் கேள்விக்குச் சரியான விடை அவர் கூறினார். பதஞ்சலியினிடம் வியாகரணம் கற்றுக்கொள்வ தற்காக தாம் காஷ்மீரத்திலிருந்து வந்துகொண் டிருப்பதாக சந்திரசர்மா கூறினார். இனி அது இயலாது என்றும் தானே பாடம் சொல்வதாகவும் பிரம்மராக்ஷஸ் கூறியது. பாடம் கேட்பதற்கு நிபந்தனை, அவர் அரசமரத்தின்மேல் இருந்து கீழே இறங்காமல், தூங்காமல் தொடர்ந்து ஒரே முறையில் பாடங்கேட்க வேண்டுமென்பதாம். சந்திரசர்மா தம் தொடையைக் கீறி அதனால் வெளிப்பட்ட ரத்தத்தைக் கொண்டு அரச இலைகளில் எல்லாப் பாடத்தையும் எழுதி மூட்டை கட்டிக் கொண்டு கீழே இறங்கினார்.



சாபவிமோசனம் பெற்ற கௌடர் பிரம்ம ராக்ஷஸ் வடிவம் நீங்கி, சுயரூபத்தில் பத்ரிக்குச் சென்றார்.

பல நாட்களாக உறக்கமின்றி இருந்ததால் சந்திரசர்மா வியாகரணம் எழுதப்பட்ட இலைகள் அடங்கிய மூட்டையின் மீது தலையை வைத்து உறங்கிவிட்டார். அவ்வழி வந்த ஓர் ஆடு சில இலைகளைத் தின்றுவிட்டது. விழித்தெழுந்த சந்திரசர்மா எஞ்சிய இலைகளோடு அம்மூட்டையை எடுத்துக்கொண்டு நடந்து சென்று, ஓர் ஊரை அடைந்தார். வைசியன் ஒருவன் வீட்டுத்திண்ணையில் களைப்பால் மயங்கிப் படுத்துவிட்டார். மயக்கநிலையில் இருந்த அவர் மீது வைசியனின் மகள் தினந்தோறும் நவரக்கிழி முறையில் தயிர்ச்சோற்றைத் தேய்த்துவர, அதனால் ஒரு நாள் அவர் சுய உணர்வு பெற்றார். உடனே பயணத்தை மேற்கொள்ளத் தொடங்கினார். அவரைக் காப்பாற்றிய தன் மகளை அவர் மணஞ்செய்து கொள்ள வேண்டுமென்று வைசியன் அரசரிடம் வழக்குத் தொடர்ந்தான். ஆனால், அழகிய இவ்விளைஞருக்குத் தத்தம் மகளை மணஞ்செய்விக்க அரசனும் அமைச்சரும் முயலவே, சந்திரசர்மா மூன்று பெண்களையும் மனைவிகளாக ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. மூன்று மனைவிகளுக்கும் ஒவ்வோர் ஆண் மகவு பிறந்த உடன், சந்திரசர்மா பத்ரிக்குச் சென்று தம் குருவான கௌடபாதரை அங்கே கண்டு அவரிடம் சந்நியாஸம் பெற்று கோவிந்த பகவத்பாதர் என்னும் திருப்பெயர் ஏற்றார். பதஞ்சலியென்னும் உருவத்தில் கௌடருக்குக் குருவான ஆதிசேஷன், கோவிந்த பகவத்பாதர் என்னும் உருவத்தில் முன் தம் சீடரான கௌடபாதருக்கு இப்போது சீடரானார்.

பத்ரியில் இவ்வாறிருக்கையில் வியாஸர் எழுந்தருளினார். தாம் எழுதிய வேதாந்த சூத்திரத்துக்கு ஈச்வரனே பேருரை எழுதுவதற் காக திருவவதாரம் செய்யப் போவதாகவும் அப்போது உலக மரபின்படி அவருக்கு உப தேசம் செய்வதற்காக கோவிந்த பகவத்பாதர் நர்மதை ஆற்றின் கரையில் காத்திருக்க வேண் டும் என்றும் வியாஸர் பணித்தார். அவ்வாறே நர்மதை ஆற்றின் கரையில் சங்கர கங்கா என்ற இடத்தில் கோவிந்த பகவத்பாதர் காத்துக்கொண் டிருந்தபோது ஈச்வரனின் அவதாரமாகிய ஆதி சங்கரர் அங்கே வந்து அவரிடம் உலக முறைப் படி உபதேசம் பெற்றார்.

ஈச்வரனையே தம் சீடனாகப் பெற்றது ஆதிசேஷனான கோவிந்த பகவத்பாதரின் பெறற் கரியபேறு.

## குருபாதுகா பஞ்சகம்

(ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கராசார்யர் அவர் கள் நர்மதா நதிக்கரையில் தம்முடைய குருவான ஸ்ரீ கோவிந்த பகவத்பாதரைத் தரிசித்தபோது அந்த ஆச்ரமத்தின் வாயிலில் குருவின் திவ்ய பாதுகைகளைக் கண்டவுடன் இந்த சுலோகங்கள் ஸ்ரீ பகவத் பாதரின் வாக்கிலிருந்து உதித்தன.)

ஜகஜ்ஜநிஸ்தே ம–லயாலயாப்யாம்
அகண்ய புண்யோதய–பாவிதாப்யாம் |
த்ரயீ சிரோஜாத–நிவேதிதாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் || 1 ||

சகல உலகங்களின் உற்பத்தி. ஸ்திதி லயம் இவற்றுக்குக் காரணங்களாயும் எல்லையில்லா மல் இருக்கிற புண்ணிய பரிபாகத்தின் மகிமை யினால் அடையக்கூடியனவாயும் வேதங்களின் சிரோபூதமான உபநிஷத்துக்களால் மட்டும் அறியக் கூடியனவுமான சத்சார்யருடைய பாதுகைகளுக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.

விபத்தமஸ்தோம–விகர்த்தநாப்யாம்
விசிஷ்ட–ஸம்பத்தி–ளிவர்தநாப்யாம் |
நமஜ்ஜநாசேஷவிசேஷ தாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் || 2 ||

ஆபத்துக்களாகிற இருள் கூட்டங்களைப் போக்குவதில் சூரியனாகவும் உயர்ந்த ஐச்வர் யங்களை மேன்மேலும் விருத்திபண்ணிக் கொடுக்கக்கூடியனவாயும் வணங்குகிற ஜனங் களுக்கு எல்லை இல்லாத சகல புருஷார்த் தங்களையும் கொடுக்கக்கூடியனவையுமான ஸ்ரீஆசார்யருடைய பாதுகைகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

ஸமஸ்த–துஸ்தர்க்க–கலங்க–பங்கா–
பநோதந–ப்ரௌட ஜலாசயாப்யாம் |
நிராச்ரயாப்யாம் நிகிலாச்ரயாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் || 3 ||

பலவாறான போலித் தர்க்கத்தினால் கற்பிக்கப்பட்ட தோஷங்களாகிய சேற்றைப் போக்கடிப்பதில் பெரிய ஜலப்பெருக்காயும் மற்றொன்றைத் தாம் ஆச்ரயிக்காமலும், மற்றவர் களாலே ஆச்ரயிக்கப் பெறுவனவாகவும் இருக் கிற ஸ்ரீ ஆச்சார்யருடைய பாதுகைகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

தாபத்ரயாதித்ய–கரார்திதாநாம்
சாயாமயீப்யாம் அதிசீதலாப்யாம் |
ஆபந்ந–ஸம்ரக்ஷண தீக்ஷிதாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் || 4 ||

ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌ திகம் என்று சொல்லக்கூடிய தாபத்ரயங்களாகிற கொடிய சூரியகிரணங்களால் தகிக்கப்படுகிற சர்வ ஜீவராசிகளுக்கும் மிகவும் குளிர்ந்த நிழலைக் கொடுப்பவையாயும் சரணமடைந்தவர் களை சம்ரக்ஷிப்பதையே முக்கிய நோக்கத்துடன் கூடியவையுமான ஸ்ரீ ஆசார்யருடைய பாதுகை களுக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.

யதோ கிரோ (அ) ப்ராப்ய தியா ஸமஸ்தா
ஹ்ரியா நிவ்ருத்தா: ஸமமேவ நித்யா: |
தாப்யாமஜேசாச்யுத–பாவிதாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் || 5 ||

சகல வேதராசிகளும் தம்முடைய புத்தி யுக்திகளோடு கூடி எவற்றின் மகிமையை வர்ணிக்க ஆரம்பித்ததும் இயலாமல் லஜ்ஜை யோடு திரும்புகின்றனவோ, பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களால் எப்போதும் கொண்டாடப்

பெற்றவையுமான ஸ்ரீ ஆசார்ய பாதுகைகளுக்கு நமஸ்காரம். நமஸ்காரம்.

யே பாதுகா–பஞ்சகமாதரேண
படந்தி நித்யம் ப்ரயதா: ப்ரபாதே |
தேஷாம் க்ருஹே நித்யநிவாஸசீலா
ஸ்ரீ தேசிகேந்த்ரஸ்ய கடாக்ஷலக்ஷ்மீ: ||6||

எந்தப் பக்தர்கள் இந்தப் பாதுகா பஞ்சகத்தை ஆதராதிசயத்துடனும் பரிசுத்தர்களாயும் பிரதிதினம் காலையில் பாராயணம் செய்கிறார்களோ அவர்களுடைய வீட்டில் ஸ்ரீ பரமாசார்யாளுடைய கருணாவிலாசம் என்ற லக்ஷ்மீ நித்யவாஸம் செய்கிறாள்.

